# இனிக்கும் பாட்டு



வாணிதாசன்

# இனிக்கும் பாட்டு

கவிஞர்

**வாணிதாசன்**

வில்லி வெளியீட்டகம்
24, வெங்கட மேஸ்திரி தெரு,
மண்ணடி, சென்னை-1

## உள்ளுறை




இனிக்கும் பாட்டுப் பாடுவேன்!—காலை
எழுச்சிப் பாட்டுப் பாடுவேன்!
கனிபி ழிந்த சாற்றைப் போலக்
காதில் இனிக்கப் பாடுவேன்!

குயிலைப் போலப் பாடுவேன்!—சின்னக்
குருவி போலப் பாடுவேன்!
அயலில் ஓடும் அருவி போல,
ஆற்றைப் போலப் பாடுவேன்!

வண்டு போலப் பாடுவேன்!—தேன்
வண்டு போலப் பாடுவேன்!
உண்டு றங்கிக் கண்வி ழித்த
உடன்எ ழுந்து பாடுவேன்!

தந்தை வாழ்த்திப் பாடுவேன்!—ஈன்ற
தாயை வாழ்த்திப் பாடுவேன்!
எந்த நாளும் தமிழை வாழ்த்தி
இனிக்க இனிக்கப் பாடுவேன்!






எங்கள் பாப்பா தங்கப் பாப்பா!
எழுந்து விழுந்து நடக்கும் பாப்பா!

செங்கை ஆட்டி அழைக்கும் பாப்பா!
சிறுவிரல் சப்பித் தூங்கும் பாப்பா!

விரலை வைத்தால் கடிக்கும் பாப்பா!
வெடுக்கென் றிழுத்தால் சிரிக்கும் பாப்பா!

கையைப் பிடித்து நடக்கும் பாப்பா!
கட்டி முத்தம் கொடுக்கும் பாப்பா!

குத்து விளக்கே எங்கள் பாப்பா!
குனிந்து சாய்ந்தே ஆடும் பாப்பா!

முத்தம் கொடுத்தால் முத்தம் கொடுக்கும்!
முகத்தை மறைத்தால் கையை எடுக்கும்!



# எங்கள் தம்பி



எங்கள் தம்பி நல்ல தம்பி!
எங்கள் தம்பி தங்கக் கம்பி!

காலைக் கையை ஆட்டிக் கொண்டு,
கழுத்தில் பையை மாட்டிக் கொண்டு,
கோலைக் கையில் எடுத்துக் கொண்டு
குலுங்கக் குலுங்கச் சிரிக்கும் தம்பி!

நாயின் மேலே ஏறிக் கொள்வான்;
நடக்கச் சொல்லி அடிஅ டிப்பான்;
தாயைப் போலக் காலை நீட்டித்
தடுக்குக் குழந்தை எடுக்கச் சொல்வான்






கவிழ்த்த நீலச் சட்டி போலக்
கண்முன் தோன்றும் வானம்!—நம்
கண்முன் தோன்றும் வானம்!
காலை மாலை கதிரைக் காட்டி
உலகைக் காக்கும் வானம்!—இந்த
உலகைக் காக்கும் வானம்!

எட்டி நடந்தால் எட்டிப் போகும்
இருக்க இருக்கும் வானம்!—அருகில்
இருக்க இருக்கும் வானம்!
பட்டப் பகலில் கடலைப் போலப்
பரந்து கிடக்கும் வானம்!—கண்முன்
பரந்து கிடக்கும் வானம்!

புளியைப் போல் நிறத்தைக் காட்டிப்
புதுமை காட்டும் வானம்!—அடிக்கடி
புதுமை காட்டும் வானம்!
ஒளியைத் தீயை மழையைக் காற்றை
உலகுக் களிக்கும் வானம்!—இந்த
உலகுக் களிக்கும் வானம்!






ஓடி ஓடி ஆனதுவே ஓடை!—நீர்
ஓடி ஓடி ஆனதுவே ஓடை!

காடு மேடு பெய்தமழை வெள்ளம்
கரைத்துக் கரைத்து வைத்தபெரும் பள்ளம்!

ஓடை பலஒன்று சேர்ந்தால் ஆறும்!
ஓடி ஓடி ஊட்டும்பல ஊராம்!

கல்லி டுக்கில் பாய்ந்துபாய்ந்தே பாடும்!
நன்செய் புன்செய் கண்டுகடல் ஓடும்!

ஓடை இல்லா ஊருக்கழ கில்லை!
நீர்வ றண்டு போனால்வரும் தொல்லை!






தென்னை நீண்ட தென்னை!
தென்னம் பிள்ளை அழகு!
தன்னை வளர்த்தோர்க்(கு) என்றும்
தலையால் கொடுக்கும் தென்னை!

பாளை விரித்துச் சிரிக்கும்!
பச்சை மட்டை விரிக்கும்!
தோளில் தேங்காய்க் குலையைத்
தொங்க விட்டே நிற்கும்!

தென்னை போல வளர்வோம்!
செவ்விள நீரைத் தருவோம்!
அன்னை தந்தை யார்க்கும்
அளிப்போம்; வாரி அளிப்போமே!






திண்ணை ஓரம் படுத்திருக்கும்;
திருடன் வந்தால் குரைத்திருக்கும்;
கண்ணை மூடிக் காதைத் தூக்கிக்
காவல் காத்துக் கொண்டிருக்கும்!

வாலை ஆட்டி மகிழ்ச்சிகாட்டும்;
வழிக்கு நல்ல துணையுமாகும்;
காலை நீட்டிப் படுத்தெழுந்து
களிப்பில் துள்ளிப் பாய்ச்சல்காட்டும்!

நாயை மறக்கக் கூடாதே!
நாயை என்றும் அடிக்காதே!
நாயும் நன்றி மறக்காதே!
நன்றி நீயும் மறக்காதே!






பெட்டைக் கோழி கூவுது!
பெட்டைக் கோழி கூவுது!—வெண்
முட்டையிட மூலை பார்த்து
முன்னும் பின்னும் தாவுது!
முன்னும் பின்னும் தாவுது!

முட்டை இட்ட கோழி குந்தி
முட்டைஅடை காக்குது!—கோழி
முட்டைஅடை காக்குது!
வட்டச் சேவல் அருகில் வந்து
பார்த்துப் பார்த்துத் திரும்புது!

பஞ்சு போலச் சின்னச் சின்னக்
குஞ்சு தாயைத் தொடருது!—சின்னக்
குஞ்சு தாயைத் தொடருது!
அஞ்சி அஞ்சிப் பெட்டைக் கோழி
அருகி ருந்தே காக்குது!

பருந்து கீரி பார்த்துப் பார்த்தே
பாய்ந்து கோழி தாக்குது!—சீறிப்
பாய்ந்து கோழி தாக்குது!
அருந்தக் குஞ்சு சீய்த்துக் காட்டி
அருகி ருந்தே காக்குது!






சிட்டுச் சிறிய சிட்டு!
செடியில் பாடும் சிட்டு!
கொட்டைப் பாக்கைப் போலத்
தோன்றும் மஞ்சள் சிட்டு!

நெல்லு மூக்கைத் திறந்தே
அங்கும் இங்கும் பறந்தே
செல்லும் துள்ளி எங்கும்!
செடியில் வந்து தங்கும்!

பூச்சி புழுவைத் தின்னும்!
புதரில் கூடு கட்டும்!
ஈச்சங் கொட்டை போல
இடுமே முட்டை சிட்டு!



# கிளியே! வா!



பச்சைப் பசுங்கிளியே! வா!வா!
பாலும் பழமருந்த வா!வா!
உச்சி மரத்தைவிட்டு வா!வா!
உயரப் பறந்துகத்தி வா!வா!

மூக்குச் சிவந்தபச்சைக் கிளியே!
முத்தம் பலதருவேன்! வா!வா!
தேக்கு மரத்(து)ஊஞ்சல் ஏறிச்
சிரித்துக் குதித்திடுவோம்! வா!வா!

கூண்டில் அடைக்கமாட்டேன்! வா!வா!
கோவைப் பழந்தருவேன்! வா!வா!
வேண்டும் பொழுதோடு! வா!வா!
விளையாடு வோம்விரைந்தே! வா!வா!



# அணில்

வாலைத் தூக்கிக் கத்திக் கத்தி
மரத்தில் பாயும் அணிலே !—பழுத்த
மரத்தில் பாயும் அணிலே !
காலைத் தூக்கிக் கோதிக் கோதிக்
கடிப்ப தென்ன அணிலே ?—நீயும்
கடிப்ப தென்ன அணிலே ?

வெள்ள ரிக்காய்த் தோலைப் போல
வெள்ளைக் கோடு முதுகில் !—மூன்று
வெள்ளைக் கோடு முதுகில் !
பிள்ளை அணிலே ! உனக்குத் தீட்டிப்
பிறக்க விட்டார் யாரே ?—அழகு
சிறக்க விட்டார் யாரே ?

பழுக்கும் முன்னர்ச் செங்காய் கோதும்;
பண்பை எங்குக் கற்ருய் ?—கெட்ட
பண்பை எங்குக் கற்ருய் ?
இழுத்துப் பறித்துப் போடு செங்காய்
எடுத்துத் தின்பேன் அணிலே !—நானும்
எடுத்துத் தின்பேன் அணிலே !



# ஆட்டுக்குட்டி



ஆட்டுக் குட்டி முன்கால் தூக்கி
அங்கும் இங்கும் துள்ளும் !—அதன்
அழகு நெஞ்சை அள்ளும் !

ஆட்டுக் குட்டி ஓடி ஓடி
'அம்மா !' என்றே கத்தும் !—தாய்
ஆட்டின் மடியை முட்டும் !

ஆட்டுக் குட்டி அழகுக் குட்டி
அருகில் படுத்துத் தூங்கும் !—தாய்
அருகில் படுத்துத் தூங்கும் !

ஆட்டுக் குட்டி துடுக்குக் குட்டி
அணைக்கப் போனால் முட்டும் !—தாய்
அருகில் ஓடிக் கத்தும் !






அடுப்பங் கரையில் பூனைக்குட்டி !
அயர்ந்து தூங்குது பூனைக்குட்டி !
துடுப்பை எடுத்தால் பூனைக்குட்டி
துள்ளிப் பாயுது பூனைக்குட்டி !

காலைச் சுற்றுது பூனைக்குட்டி !
கதவில் ஏறுது பூனைக்குட்டி !
பாலைத் திருடுது பூனைக்குட்டி !
பரணில் பதுங்குது பூனைக்குட்டி !

முன்கால் தூக்குது பூனைக்குட்டி !
முகத்தைத் துடைக்குது பூனைக்குட்டி !
பின்கால் குந்திப் பூனைக்குட்டி
பேசா திருக்குது பூனைக்குட்டி !

எலியைப் பிடிக்கப் பூனைக்குட்டி !
இரவில் பாயுது பூனைக்குட்டி !
புலிக்குத் தெரியா மரம்ஏறும்
புதுமை கற்றது பூனைக்குட்டி !







மூன்று சக்கர வண்டி !
முன்பின் போகும் வண்டி !
நானும் ஏறி மிதிப்பேன் !
நன்றாய்ப் போகும் வண்டி !

சட்டை போட்டுக் கொள்வேன் ;
தலையை வாரிக் கொள்வேன் ;
பொட்டு மிட்டுக் கொள்வேன் ;
வண்டி ஏறிப் போவேன் !

கையால் மணியை அடிப்பேன் ;
சாய்ந்து சாய்ந்து மிதிப்பேன் ;
அய்யா அம்மா கண்முன்
வண்டி ஓட்டிக் களிப்பேன் !





# புத்தகம்

சின்னச் சின்னப் புத்தகம்!
சிறுவர் படிக்கும் புத்தகம்!
அன்னை போல எந்த நாளும்
அறிவை ஊட்டும் புத்தகம்!

படங்கள் நிறைந்த புத்தகம்!
பாடல் நிறைந்த புத்தகம்!
கடலைப் போல என்றும் வற்றாக்
கருத்தை ஊட்டும் புத்தகம்!

கண்ணைத் திறக்கும் புத்தகம்!
கதைகள் சொல்லும் புத்தகம்!
மண்ணை விண்ணை விளக்கி நல்ல
வாழ்வ ளிக்கும் புத்தகம்!

பாட்டி போலப் புத்தகம்
பச்சைச் சிரிப்பைக் காட்டியே
ஏட்டு வாயால் நித்தம் நித்தம்
இனிக்க இனிக்கச் சொல்லுமே!





# உயிர் எழுத்து



அம்மா அப்பா அ சொல்லே !
ஆட்டுக் குட்டி ஆ சொல்லே !
இந்தா; இந்தா இ சொல்லே !
ஈயை ஓட்டி ஈ சொல்லே !
உரலில் உமிபார் உ சொல்லே !
ஊஞ்சல் ஆடுநீ ஊ சொல்லே !
எருமை எங்கே ? எ சொல்லே !
ஏணி ஏற்றம் ஏ சொல்லே !
ஐந்தே விரல்கள் ஐ சொல்லே !
ஒன்றே தலையும் ஒ சொல்லே !
ஓடு ஓணான் ஓ சொல்லே !
ஔவைப் பாட்டி ஔ சொல்லே !
அறிவாய் உயிர்எழுத் திவையாமே !






ஒன்றே தலையும் ஒன்று !
இரண்டே கைகால் இரண்டு !
முக்காலிக் கால்கள் மூன்று !
நாற்காலிக் கால்கள் நான்கு !
ஒருகை விரல்கள் ஐந்து !
வண்டின் கால்கள் ஆறு !
ஞாயிறு முதற்சனி ஏழு !
திசையும் திசையும் எட்டு !
தானிய வகைகள் ஒன்பது !
இருகை விரல்கள் பத்தே !

**1 2 3 4 5**

**6 7 8 9 10**




## பெண்

அக்காளைப்போல் வயதானால்
ஆடல் பாடல் கற்றிடுவேன் !

அத்தை போல வயதானால்
அடுப்பில் சமையல் செய்திடுவேன் !

அம்மாவைப்போல் வயதானால்
உணவை அளித்துக் களித்திடுவேன் !

பாட்டி போல வயதானால்
நீட்டிக் குந்திக் கதைசொல்வேன் !

சித்தி போல வயதானால்
தெருவில் கோலம் போட்டிடுவேன் !







# வயதானால்...?

## ஆண்

அண்ணன் போல வயதானால்
அலுவல் செய்வேன் ; பொருள்சேர்ப்பேன் !

மாமன் போல வயதானால்
வயலை உழுது நெல்லறுப்பேன் !

அப்பா வைப்போல் வயதானால்
அள்ளி அள்ளி வழங்கிடுவேன் !

தாத்தா போல வயதானால்
தமிழுக் கென்றே உழைப்பேனே !






செடியில் பூக்கள் பூத்ததே !
சிட்டுப் புதரில் பாடுதே !
படிக்க வேண்டும் ; எழுந்திரு !
பாப்பா ! பாப்பா ! எழுந்திரு !

வானம் கிழக்கில் வெளுத்ததே !
மரத்தில் காக்கை கரையுதே !
ஏனோ தூக்கம் ? எழுந்திரு !
எழுந்து படிநீ ! எழுந்திரு !

சேவல் கூவி அழைக்குதே !
தெருவில் நாயும் குரைக்குதே !
கூவிப் பாடம் படிக்கவேண்டும் ;
குழந்தாய் ! குழந்தாய் ! எழுந்திரு !






கண்ணே! மணியே! தூங்கு!
கண்ணை மூடித் தூங்கு!

பாலும் தருவேன்; தூங்கு!
பழமும் தருவேன்; தூங்கு!
காலை நீட்டித் தூங்கு!
கண்ணே! மணியே! தூங்கு!

பொம்மை தருவேன்; தூங்கு!
பொங்கல் தருவேன்; தூங்கு!
அம்மா வந்தால் அடிப்பார்;
அழாதே கண்ணே! தூங்கு!

வெல்லம் தருவேன்; தூங்கு!
விடிய விடியத் தூங்கு!
நல்ல நல்ல கதைகள்
நானும் சொல்வேன்; தூங்கு!



# காலை எழுவோம்

காலை எழுவோம்; எழுவோமே!
காலைக் கடனை முடிப்போமே!
நூலை எடுத்துப் படிப்போமே!
தலையை வாரி முடிப்போமே!

புத்தகம் பலகை எடுப்போமே!
பள்ளி புகுந்து படிப்போமே!
அத்தை அக்காள் போல்நாமே
ஆகும் வரையில் படிப்போமே!

படிக்கப் படிக்க அறிவுண்டாம்!
படிக்கப் பின்னொரு விழியுண்டாம்!
படிக்கப் படிக்கப் பொருளுண்டாம்!
பலரும் புகழ வழியுண்டாம்!



# பழகுவோம்



தலையை வாரப் பழகுவோமே!
சடைகள் போடப் பழகுவோமே!

பூமு டிக்கப் பழகுவோமே!
பொட்டு வைக்கப் பழகுவோமே!

கோலம் போடப் பழகுவோமே!
கூட்டிப் பெருக்கப் பழகுவோமே!

பூக்கள் போடப் பழகுவோமே!
புதுத்துணி தைக்கப் பழகுவோமே!

அன்பாய்ப் பேசப் பழகுவோமே!
ஆடல் பாடல் பழகுவோமே!

பள்ளிக் கோடிப் படிப்போமே!
பலரும் புகழ நடப்போமே!



# இன்றும் நாளையும்

பாட்டி போலக் குனிந்து நடந்து
பல்லை இளித்துக் காட்டுவேன்!—இன்று
பல்லை இளித்துக் காட்டுவேன்!
கூட்டிப் பெருக்கி அம்மா போலக்
குடும்பம் நடத்திக் காட்டுவேன்!—நாளைக்
குடும்பம் நடத்திக் காட்டுவேன்!

வீட்டைக் காக்கும் அப்பா போல
மெல்லச் சிரித்துக் காட்டுவேன்!—இன்று
மெல்லச் சிரித்துக் காட்டுவேன்!
நாட்டைக் காக்கும் சிப்பாய் போல
நிமிர்ந்து நடந்து காட்டுவேன்!—நாளை
நிமிர்ந்து நடந்து காட்டுவேன்!

காளை போல நடந்து காட்டிக்
கன்றைப்போலத் துள்ளுவேன்!—இன்று
கன்றைப் போலத் துள்ளுவேன்!
தோளைத் தூக்கி நடைந டந்து
வாளை ஏந்திக் காட்டுவேன்!—நாளை
வாளை ஏந்திக் காட்டுவேன்!



# கடற்கரைக்குச் செல்வேன்

தலையைச் சீவிப் பொட்டு மிட்டுச்
சட்டை போட்டுக் கொள்வேன்!—நல்ல
சட்டை போட்டுக் கொள்வேன்!
அலையை வீசும் கடற்க ரைக்கே
அப்பா வோடு செல்வேன்!—மாலை
அப்பா வோடு செல்வேன்!

கடலைப் பார்த்துக் காலை நீட்டிக்
கரையில் குந்திக் கொள்வேன்!—கடற்
கரையில் குந்திக் கொள்வேன்!
கடல லைகள் சீறிப் பாயக்
கையைப் பிடித்துக் கொள்வேன்!—அப்பா
கையைப் பிடித்துக் கொள்வேன்!

வேர்க்கடலை மிட்டாய் சுண்டல்
விற்கும்; வாங்கிக் கொள்வேன்!—அங்கு
விற்கும்; வாங்கிக் கொள்வேன்!
ஊர்இ ருட்ட அப்பா வோடே
ஒப்பாய் வந்து சேர்வேன்!—வீட்டிற்(கு)
ஒப்பாய் வந்து சேர்வேன்!






உண்மையே சொல்வோம்!—என்றும்
உண்மையே சொல்வோம்!

உதைகள் கொடுத்தாலும்,
கைகால் ஒடித்தாலும்
உண்மையே சொல்வோம்—என்றும்
உண்மையே சொல்வோம்!

மண்ணில் நிலைப்பது உண்மையே ஆகும்!
வாழ்வில் நிலைப்பது உண்மையே ஆகும்!
எண்ண இனிப்பது உண்மையே ஆகும்!
எவரும் புகழ்வதும் உண்மையே ஆகும்!

உண்மையால் உயர்ந்தவர் நாட்டினிற் கோடி
உண்டென்று நாமெலாம் ஒன்றாகக் கூடிப்
பண்ணோடு தாளத்தைக் கொட்டியே ஆடிப்
பாடுவோம் பாடுவோம் பாடுவோம் ஓடி!






காக்கா! காக்கா! ஓடிவா!
கத்திக் கத்தி நடந்துவா!
ஆக்கிய சோறு தின்னலாம்;
அதன்பின் பறந்து போகலாம்!

குருவி! குருவி! ஓடிவா!
கூண்டை விட்டே இறங்கிவா!
குருவி! குருவி! ஓடிவா!
நெல்லைக் கொத்தித் தின்னவா!



மயிலே! மயிலே! இறங்கிவா!
தோகை விரித்து ஆடிவா!
குயிலே! குயிலே! ஓடிவா!
குழந்தை சிரிக்கப் பாடிவா!





கிளியே! கிளியே! பறந்துவா!
கீழே இறங்கி நெருங்கிவா!
அளிந்த பழத்தைத் தின்பாயோ?
அல்லது செங்காய் தின்பாயோ?

  

# இருக்க வேண்டும்



மொட்டை மாடு கட்டியே
கட்டை வண்டி வருகுதே!
எட்டி வழியை விட்டுமே
இருக்க வேண்டும் ஓரமே!

'ஓம்!ஓம்!' என்று கூவியே
உந்து வண்டி வருகுதே!
நாமும் விலகி நின்றுமே
நடக்க வேண்டும் என்றுமே.

ஏறி மிதிக்க வருகுதே
இரண்டு சக்கர வண்டியும்!
மாறி ஓரம் இருந்துமே
வழியில் ஒதுங்க வேண்டுமே!








சின்னத் தம்பி சிரிப்பைப் போலச்
செடியில் முல்லை பூத்ததே!—வீட்டுச்
செடியில் முல்லை பூத்ததே!

சின்ன அக்கா சிரிப்பைப் போலச்
செந்தா மரையும் பூத்ததே!—குளச்
செந்தா மரையும் பூத்ததே!

அம்மா சிரிக்கும் சிரிப்பைப் போல
அல்லி மலரும் பூத்ததே!—செவ்
வல்லி மலரும் பூத்ததே!









அப்பா சிரிக்கும் சிரிப்பைப் போல

அழகு ரோசா பூத்ததே!—முள்

அழகு ரோசா பூத்ததே!









# திரும்பி வந்தார்!




போன அம்மா திரும்பிவந்தார் ;
புதிய நகைகள் வாங்கிவந்தார் !
நானும் நகைகள் போட்டுக்கொண்டு
நடந்து போவேன் பள்ளிக்கின்று !




போன அப்பா திரும்பிவந்தார் ;
புத்தகம் பலகை வாங்கிவந்தார் !
நானும் பையிற் போட்டுக்கொண்டு
படிக்கப் போவேன் பள்ளிக்கின்று!




போன பாட்டி திரும்பிவந்தார் ;
பூவும் பழமும் வாங்கிவந்தார் !
நானும் பூவை முடித்துக்கொண்டு
பள்ளிக் கோடிப் போவேனின்று !




போன மாமி திரும்பிவந்தார் ;
புதிய சட்டை வாங்கிவந்தார் !
நானும் சட்டை போட்டுக்கொண்டு
நன்குய்ப் போவேன் பள்ளிக்கின்று !



போன மாமா திரும்பிவந்தார்;
புதிய குடையை வாங்கிவந்தார்!
நானும் குடையை விரித்துக்கொண்டு
நடந்து போவேன் பள்ளிக்கின்று!





போன தாத்தா திரும்பிவந்தார்;
புதிய வண்டி வாங்கிவந்தார்!
நானும் அதிலே ஏறிக்கொண்டு
விரைந்து செல்வேன் பள்ளிக்கின்று!





# கண் கண்ட தெய்வம்



கற்றுக் கொடுத்தவர்,
கண்ணைக் கொடுத்தவர்
கண்முன் வருந்தெய்வமே! — தம்பி !
கற்றுத் தெளிந்தபின்
வற்ருப் பெருஞ்செல்வம்
கல்வியப் பெருஞ்செல்வமே! — தம்பி !

அறிவுக் குவியலை
அள்ளிக் கொடுத்தவர்
ஆசிரியர் அன்றியாராம் ? — தம்பி !
அறிவைக் கொடுத்தவர்,
வாழ்வைக் கொடுத்தவர்
அன்னைக்கும் தந்தைக்கும் மேலாம் !






# ஆசிரியர்

ஆசை யோடு பள்ளி வந்தே
அன்பாய்ப் பாடம் சொல்லுவார் !—வகுப்பில்
அன்பாய்ப் பாடம் சொல்லுவார் !
மேசை மீது தட்டித் தட்டி
மெல்லப் பாடம் சொல்லுவார் !—நாங்கள்
சொல்லப் பாடம் சொல்லுவார் !

கண்ணைக் கையை ஆட்டி ஆட்டிக்
'கப்சிப்' பென்றே கூவுவார் !—நாக்கைக்
கடித்துக் காட்டிக் கூவுவார் !
எண்ணி எண்ணி எண்ணிக் காட்டி
எம்மை எண்ணச் சொல்லுவார் !—குண்டை
எடுத்தே எண்ணச் சொல்லுவார் !

எழுதி எழுதி எழுதிக் காட்டி
எழுதச் சொல்லி அதட்டுவார் !—பாடம்
எழுதச் சொல்லி அதட்டுவார் !
அழுத பிள்ளை சிரித்துக் காட்டும் ;
அவரைக் கண்டு அடங்குமே !—அவர்
அன்பைக் கண்டு அடங்குமே !





# வகுப்பில் பேசாதே



வகுப்பில் பேசாதே !—குழந்தாய் !
வகுப்பில் பேசாதே !

வகுப்புப் படிப்பு வாழ்க்கைப் படிப்பு
மனத்தில் வாங்கிக் கொள்ளு !—நீ
மனத்தில் வாங்கிக் கொள்ளு !
வகுப்பு முடிந்து வீட்டை யடுத்து
மனத்தில் எண்ணிக் கொள்ளு !—நீ
மனத்தில் எண்ணிக் கொள்ளு !

அடக்கம் ஒடுக்கம் காட்டி வகுப்பில்
அன்பாய் விளக்கம் கேளு !—நீ
அன்பாய் விளக்கம் கேளு !
துடுக்குத் தனத்தை விடுத்துப் படிப்பைத்
தொடர்ந்து கற்றுக் கொள்ளு !—நீ
தொடர்ந்து கற்றுக் கொள்ளு !



# தொழிலைக் கற்போம்!

தொழிலைக் கற்போமே! —கைத்
தொழிலைக் கற்போமே!

அழகுப் பூக்கள் பின்னலாம்;
ஆடை தைக்கக் கற்கலாம்;
உழவுத் தொழிலைச் செய்யலாம்;
ஓவி யங்கள் தீட்டலாம்!

கத்த ரிக்கப் பழகலாம்;
காகி தப்பூச் செய்யலாம்;
முத்து மாலை கோக்கலாம்;
முல்லைப் பூக்கள் தொடுக்கலாம்!



எந்தத் தொழிலும் செய்யலாம் ;
இழிந்த தொழில்கள் இல்லையாம் !
எந்த உதவி அற்றபோதும்
இவற்றால் பசியைப் போக்கலாம் !








கல்வி கற்க வேண்டும் !—கைத்
தொழிலும் கற்க வேண்டும் !
கல்விச் செல்வம் போலே—கைத்
தொழிலும் செல்வ மாமே !

தூய்மை செய்யக் கற்போம் !—சிறு
துடைப்பம் செய்யக் கற்போம் !
பாய்மு டையக் கற்போம் !—தோட்டப்
பயிர்வி ளைக்கக் கற்போம் !

தையல் வேலை கற்போம் !—சிறு
தட்டி செய்யக் கற்போம் !
பையப் பையப் பொம்மை—சட்டி
பானை செய்யக் கற்போம் !

கூடை முடையக் கற்போம் !—குருத்
தோலை முடையக் கற்போம் !
ஆடை தைக்கக் கற்போம் !—வீட்டிற்(கு)
அழகு சேர்க்கக் கற்போம் !

பின்னல் கற்றுக் கொள்வோம் !—நன்றாய்ப்
பேசக் கற்றுக் கொள்வோம் !
சின்னச் சின்ன வேலை—நாளைப்
பொன்ன ளிக்கும் வேலை !






உழவர் நிலத்தை உழுவார் ;
உழுத நிலத்தில் விதைப்பார் ;
பழுதில் லாமல் நீரைப் பாய்ச்சிப்
பயிரை நாளும் வளர்ப்பார் !

நிலத்தில் களையை எடுப்பார் ;
நெல்லுக் கெருவைக் கொடுப்பார் ;
தலையைத் தாழ்த்தி விளைந்த செந்நெல்
தங்கக் கதிரை அறுப்பார் !

களத்தில் நெல்லை அடிப்பார் ;
கட்டி மூட்டை எடுப்பார் ;
உளத்தில் மகிழ்ச்சி பொங்கப் பொங்க
உண்டு வழங்கிக் களிப்பார் !








பாலுக் குள்ளே
வெண்ணெய் உண்டாம் ;
உண்மை !

பழத்துக் குள்ளே
கொட்டை உண்டாம் ;
உண்மை !

கொட்டைக் குள்ளே
செடியும் உண்டாம் ;
உண்மை !

தோலுக் குள்ளே
சதையும் உண்டாம் ;
உண்மை !

தோப்புக் குள்ளே
மரங்கள் உண்டாம் ;
உண்மை !

மரங்க ளுள்ளே
பழுப்பும் உண்டாம் ;
உண்மை !

நெஞ்சுக் குள்ளே
  ஆசை உண்டாம் ;
    உண்மை !

நினைவுக் குள்ளே
  செயல்கள் உண்டாம் ;
    உண்மை !

செயலுக் குள்ளே
  விளைவும் உண்டாம் ;
    உண்மை !

பஞ்சுக் குள்ளே
  நூலும் உண்டாம் ;
    உண்மை !

படிப்புக் குள்ளே
  அறிவும் உண்டாம் ;
    உண்மை !

அறிவுக் குள்ளே
  புதுமை உண்டாம் ;
    உண்மை !



# பொங்கல் வந்தது!

வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
மலர்கள் எங்கும் பூத்ததே !
வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
மாடு கன்று கொழுத்ததே !

வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
வாழைக் குலையும் பழுத்ததே !
வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
மாவும் பலாவும் பழுத்ததே !

வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
வந்தன கரும்புக் கழிகளே !
வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
பாலும் பொங்கி வழிந்ததே !



வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
புதிய ஆடை வந்ததே !
வந்தது பொங்கல் ! வந்தது பொங்கல் !
புதிய ஆண்டும் வந்ததே !










வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
வயிற்றில் சுமந்து பெற்ருயே !
வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
வளர்த்தாய் ; ஊட்டி வளர்த்தாயே !

வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
வார்த்தை சொல்லிக் கொடுத்தாயே !
வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
வாரி அணைத்து மகிழ்ந்தாயே !

வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
வாரி முடித்துக் களித்தாயே !
வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
பள்ளிக் கனுப்பிச் சிரித்தாயே !

வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
மாமன் போலப் படிப்பேனே !
வணக்கம் ! வணக்கம் ! என்தாயே !
உன்னை என்றும் மறவேனே !





# வணக்கம் செய்வோம்!

அன்னை தந்தை தெய்வம் !
அன்பாய் வணக்கம் செய்வோம் !

நம்மை ஈன்ற தெய்வம் ;
நம்முன் கண்ட தெய்வம் ;
நம்மை வளர்த்த தெய்வம் ;
நாளும் வணக்கம் செய்வோம் !

பள்ளிக்(கு) ஓடிப் படிப்போம் ;
பலவும் கற்று முடிப்போம் ;
உள்ளம் குளிர நடப்போம் ;
ஊரில் நற்பெயர் எடுப்போம் !

தலையை நிமிர்த்தி நடப்போம் ;
தாய்மொழி போற்றி வளர்ப்போம் ;
உலகப் புகழை எடுப்போம் ;
ஊருக் காக உழைப்போம் !

